# பன்னிரு திருமுறைப் பாராயணத் திரட்டு

## (ஏழு நாட்கள்)



கொய்த பன்மலர் கம்பை மாநதியில்
குலவு மஞ்சனம் நிலவுமெய்ப் பூச்சு
நெய்தரும் கொழுந் தூப தீபங்கள்
நிறைந்த சிந்தையில் நீடிய அன்பின்
மெய்தரும்படி வேண்டின எல்லாம்
வேண்டும் போதினில் உதவ மெய்ப் பூசை
எய்த ஆகம விதியெலாம் செய்தாள்
உயிர்கள் யாவையும் ஈன்ற எம்பிராட்டி

- தெய்வச் சேக்கிழார்


**தொண்டை மண்டல சிவனடியார் திருக்கூட்டம்**

அலைபேசி : **9840819439**

## திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனம்



ஆதினக் குருமுதல்வர்
நமசிவாய மூர்த்திகள்



23ஆம் பட்டம் சீர்வளர்சீர்
சிவப்பிரகாச சுவாமிகள்



24ஆம் பட்டம் சீர்வளர்சீர்
அம்பலவாண சுவாமிகள்

## குரு வணக்கம்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே .

குருவே சிவம் எனக் கூறினன் நந்தி
குருவே சிவம் என்பது குறித்தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர்வு அற்றதோர் கோவே .

தந்தை தாய் ஆவானும் சார்கதி இங்கு ஆவானும்
அந்தம் இல்லா இன்பம் நமக்கு ஆவானும்
எந்தம் உயிர் தான் ஆகுவானும் சரண் ஆகுவானும்
அருட்கோண் ஆருவானும் குரு

## நமச்சிவாய மூர்த்திகள் துதி

இருதய நாப்பண் அஞ்செழுத்து உருவின்
இறைவனை, உயிர் கொலை செயாமை,
அருள், பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை,
அன்பு, அறிவு என்னும் எண்மலர் கொண்டு
ஒருமையொடு அருச்சித்திடுக என்று அடியார்க்கு
ஒள்ளிய தீக்கை செய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறை அருட்குருவாம்
திருநமச்சிவாயர் தாள் போற்றி!!

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில் வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கு ஓர்
மெய்ஞ்ஞான பானு ஆகிக்
குயில் ஆரும் பொழில் திருவாவடுதுறைவாழ்
குரு நமச்சிவாய தேவன்,
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

# பதிப்புரை

உலகில் தோன்றிய அனைத்து உயிர்களும் தமக்கே உரிய முறையில் உணர்வுகளை வெளிப்படுத்துகின்றன. அதுவே மொழி எனப்பட்டது. அவற்றில் மனிதர்கள் பேசும் மொழி ஆயிரக்கணக்கில் உள்ளது. அதில் தமிழர்களாகிய நமக்கு தாய்மொழி தமிழ் ஆகும்.

ஒவ்வொரு சமயத்தாருக்கும் அவர்களுக்கு உரிய மொழியில் இறை வழிபாடு செய்ய தொகுக்கப்பட்ட நூல்கள் உள்ளன. அவ்வாறு சைவர்களாகிய நாம் வழிபாடு செய்ய தொகுக்கப்பட்ட நூல்களே பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங்கள். அவ்வாறு 27 திருமுறை ஆசிரியர்களால் தொகுக்கப்பட்ட நூல்களே பன்னிரு திருமுறைகள் 18280 பாடல்களாகும். அவற்றில் சொல்லப்படாத தகவல்களே இல்லை எனலாம். நம் வாழ்வியல் முறை, கடவுள் வழிபாடு, இறைவனின் தன்மை, உயிர்களின் தன்மை, இறைவனை அடையும் முறை, சைவ சித்தாந்தம் என அனைத்தும் கூறப்பட்டுள்ளன. அதில் நாம் இந்த நூலில் காண்பது ஒரு சிறிதே. பன்னிரு திருமுறைகளை தினசரி பாராயணம் செய்ய வேண்டும் என்னும் நோக்கில் 12 திருமுறைகளில் ஒரு பாடல் வீதம் 7 நாட்களுக்கு பதிப்பித்துள்ளோம். அன்பர்கள் நாளும் படித்து இன்புற வேண்டுகிறோம்.

இந்நூலில் வெளிவர பெரிதும் உதவிய அருள்தரும் தையல்நாயகி உடனாய அருள்மிகு வைத்தியநாதர் திருவருளையும், திருவாவடுதுறை ஆதீனம் 23வது குருமகா சன்னிதானம் சிவப்பிரகாச சுவாமிகள் குருவருளையும், திருமுறை ஆசிரியர்கள், கச்சியப்ப சிவாச்சாரியார், சிவஞான முனிவர் திருவடிகளையும் நீள நினைந்து வணங்குகிறோம்.

இந்நூலினை அச்சிட்டு கொடுத்த கோவை சௌமி அச்சக உரிமையாளர் சைவத்திரு. தே.திருஞானசம்பந்தம் அவர்களுக்கும் நன்றிகள் உரித்தாகுக. அன்பர்கள் நாள்தோறும் படித்து இன்புறுக.

இங்ஙனம்

தொகுப்பு : **தொண்டை மண்டல சிவனடியார் திருக்கூட்டம்**
சென்னை - 600 116. அலைபேசி : 9840819439

அச்சிட்டோர் : **சௌமி அச்சகம்,**
சரவணம்பட்டி, கோவை. அலைபேசி : 98422 52779

# ஞாயிற்றுக்கிழமை

## முதல் திருமுறை

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே என்று உனைப்பேசின் அல்லால்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையினால் உயர்ந்த
நிறையுடையார் இடர் களையாய் நெடுங்களம் மேயவனே.

## இரண்டாம் திருமுறை

கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே.

## மூன்றாம் திருமுறை

மதுசூதன் நான்முகன் வணங்கரியார்
மதியது சொல்லிய மயேந்திரரும்
கதிர்முலை புல்கிய கயிலையாரும்
அதியன் ஆரூர்ஆதி ஆனைக்காவே.

## நான்காம் திருமுறை

வென்றிலேன் புலன்கள் ஐந்தும் வென்றவர் வளாகந் தன்னுள்
சென்றிலேன் ஆதலாலே செந்நெறி அதற்குஞ் சேயேன்
நின்றுளே துளும்புகின்றேன் ஈசனே ஈசனேயோ
இன்று உளேன் நாளை இல்லே என்செய்வான் தோன்றினேனே.

## ஐந்தாம் திருமுறை

வெள்ளெருக்கு அரவம் விரவும் சடைப்
புள்ளிருக்கு வேளூர் அரன் பொற்கழல்
உள்ளிருக்கும் உணர்ச்சி இல்லாதவர்
நள்ளிருப்பர் நரகக் குழியிலே.

## ஆறாம் திருமுறை

மாதினையோர் கூறுகந்தாய் மறைகொள் நாவா
மதிசூடீ வானவர்கள் தங்கட்கெல்லாம்
நாதனே என்றுஎன்று பரவி நாளும்
நைஞ்சுருகி வஞ்சகம் அற்று அன்பு கூர்ந்து
வாதனையால் முப்பொழுதும் பூநீர் கொண்டு
வைகல் மறவாது வாழ்த்தியேத்திக்
காதன்மையால் தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே

## ஏழாம் திருமுறை

யாழைப் பழித்தன்ன மொழிமங்கை ஒரு பங்கன்
பேழைச் சடைமுடிமேற் பிறை வைத்தான் இடம் பேணில்
தாழைப் பொழிலூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக் குரங்குண்ணும் மறைக் காடே

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

ஏழைத் தொழும்பனேன், எத்தனையோ காலம் எல்லாம்
பாழுக்கு இறைத்தேன், பரம்பரனைப் பணியாதே,
ஊழி முதல், சிந்தாத நல்மணி, வந்து, என்பிறவித்
தாழைப் பறித்தவா தோள் நோக்கம் ஆடாமோ!

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

அந்தியின் வாயெழில் அம்பலத்து எம்பரன் அம்பொன்வெற்பிற்
பந்தியின் வாய்ப் பலவின் சுளை பைந்தேனொடுங் கடுவன்
மந்தியின் வாய்க் கொடுத்து ஓம்பும் சிலம்ப மனங்கனிய
முந்தியின் வாய்மொழி நீயே மொழி சென்றம் மொய்குழற்கே.

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே?
அன்பொடு தன்னை அஞ்செழுத்தின்
சொற்பதத்துள் வைத்(து) உள்ளம் அள்ளூறும்
தொண்டர்க்(கு) எண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம் பொன்மாளிகையும்
பவளவாயவர் பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை
கொண்ட சோளேச்சரத் தானே

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

நிட்டையிலாவுடல் நீத்தென்னை
ஆண்ட நிகரிலா வண்ணங்களும்
சிட்டன் சிவனடியாரைச்
சீராட்டுந் திறங்களுமே சிந்தித்(து)
அட்டமூர்த்திக்கென் அகம்நெக
ஊறும் அமிர்தினுக்(கு) ஆலநிழற்
பட்டனுக்(கு) என்னைத் தன் பாற்படுத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவதில்லை நமனும் அங்கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே.

## பதினோராம் திருமுறை

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆல வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்

பருவக் கொண் மூப்படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க

பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

## பன்னிரண்டாம் திருமுறை

செங்கண் வெள் விடையின் பாகர் திண்ணனார் தம்மையாண்ட
அங்கணர் திருக்காளத்தி அற்புதர் திருக்கை அன்பர்
தங்கண் முன் இடங்குங் கையைத் தடுக்க மூன்றடுக்கு நாக
கங்கணர் அமுத வாக்குக் கண்ணப்ப நிற்க என்ற.

## கொடிக்கவி

ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் ஒன்று மேலிடில் ஒன்று
ஒளிக்கும் எனினும் இருள் அடராது உள் உயிருக்கு உயிராய்த்
தெளிக்கும் அறிவு திகழ்ந்து உளதேனும் திரிமலத்தே
குளிக்கும் உயிர் அருள் கூடும் படி கொடி கட்டினனே

## திருக்குறள்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்

## அம்மன் துதி

உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயம் என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே.

## முருகன் துதி

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சல் என வேல் தோன்றும் நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா என்று ஓதுவார் முன்.



**தென்னாடுடைய சிவனே போற்றி!**

**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!**

# திங்கட்கிழமை

## முதல் திருமுறை

பாலினால் நறுநெய்யால் பழத்தினால் பயின்றாட்டி
நூலினால் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்
சேலினார் வயல்புடைசூழ் செங்காட்டங்குடி அதனுள்
காலினால் கூற்று தைத்தான் கணபதீச்சரத்தானே.

## இரண்டாம் திருமுறை

செம்பொனார் தரு வேங்கையும் ஞாழலுஞ் செருந்தி செண்பகமானைக்
கொம்பும் ஆரமும் மாதவி சுரபுனை குருந்தலர் பரந்துந்தி
அம்பொன் நேர்வரு காவிரி வடகரை மாந்துறை உறைகின்ற
எம்பிரான் இமையோர் தொழு பைங்கழல் ஏத்துதல் செய்வோமே.

## மூன்றாம் திருமுறை

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை இவை சொல்லி
உலகு எழுந்து ஏத்தக்
கடறினாராவர் காற்றுளாராவர் காதலித் துறைதரு கோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம் போய்க் கோவணங்
கொண்டு கூத்தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர் நின்ற எம் பசுபதியாரே .

## நான்காம் திருமுறை

மடந்தை பாகத்தர் போலும் மான்மறிக் கையர் போலும்
குடந்தையிற் குழகர் போலுங் கொல் புலித்தோலர் போலும்
கடைந்த நஞ்சுண்பர் போலுங் காலனைக் காய்வர் போலும்
அடைந்தவர்க்கு அன்பர் போலும் ஆவடு துறையனாரே.

## ஐந்தாம் திருமுறை

கொன்றை சூடியைக் குன்ற மகளொடும்
நின்ற நீலக் குடியரனே எனீர்
என்றும் வாழ்வு உகந்தே இறுக்கும் நீர்
பொன்றும் போது நுமக்கு அறிவு ஒண்ணுமே.

## ஆறாம் திருமுறை

ஆண்டானை அடியேனை ஆளாக் கொண்டு
அடியோடு முடி அயன் மால் அறியா வண்ணம்
நீண்டானை நெடுங்கள மாநகரான் தன்னை
நேமிவான் படையால் நீளுரவோன் ஆகங்
கீண்டானைக் கேதாரம் மேவினானைக்
கேடிலியைக் கிளர் பொறி வான் அரவோடு என்பு
பூண்டானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே

## ஏழாம் திருமுறை

ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
உன்னை உன்னிய மூவர் நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுலகு ஆளப்
புகழினால் அருள் ஈந்தமை அறிந்து
மிக்க நின் கழலே தொழுது அரற்றி
வேதியா ஆதி மூர்த்தி நின் அரையில்
அக்கணிந்த எம் மானுனை அடைந்தேன்
ஆவடுதுறை ஆதி எம் மானே

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்
இந்திரனைத் தோள்நெரித்திட்டு எச்சன் தலையரிந்து
அந்தரமே செல்லும் அலர்கதிரோன் பல்தகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை ஓட்டுகந்த
செந்தாரப் பொழில் புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய்

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

அளவியை யார்க்கும் அறிவரியோன் தில்லையம்பலம் போல்
வளவிய வான் கொங்கை வாள்தடங்கண் நுதல் மாமதியின்
பிளவியன் மின்னிடை பேரமை தோளிது பெற்றிஎன்றால்
கிளவியை என்னோ இனிக்கிள்ளையார் வாயில் கேட்கின்றதே.

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

மங்கையோடிருந்தே யோகு செய்வானை
வளர்இளந் திங்களை முடிமேல்
கங்கையோடு அணியும் கடவுளைக் கங்கை
கொண்ட சோளேச்சரத்தானை
அங்கையோடு ஏந்திப் பலிதிரி கருவூர்
அறைந்த சொல்மாலையால் ஆழிச்
செங்கையோடு உலகில் அரசு வீற்றிருந்து
திளைப்பதும் சிவனருட் கடலே.

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

எந்தை எந்தாய் சுற்றம் முற்றும்
எமக்கமுதாம் எம்பிரான் என்றென்று
சிந்தை செய்யும் சிவன்சீர்
அடியார் அடிநாய் செப்புறை
அந்தமில் ஆனந்தச் சேந்தன்
எனைப்புகுந்து ஆண்டுகொண்டு ஆருயிர்மேல்
பந்தம் பிரியப் பரிந்தவனே
என்று பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

பொன்னைக் கடந்திலங்கும் புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்து சுடுபொடி ஆடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே.

## பதினோராம் திருமுறை

நிலா இலங்கு வெண்மதியை நேடிக்கொள் வான்போல்
உலாவி உழிதருமா கொல்லோ - நிலா இருந்த
செங்கரவ் வானமே ஒக்கும் திருமுடிக்கே
புக்கரவம் காலையே போன்று.

## பன்னிரண்டாம் திருமுறை

தெண்ணிலா மலர்ந்த வேணியாய்
உன்றன் திருநடம் கும்பிடப்பெற்று
மண்ணிலே வந்த பிறவியே எனக்கு
வாலிதாம் இன்பமாம் என்று

கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக்
கைமலர் உச்சிமேல் குவித்துப்
பண்ணினால் நீடி அறிவரும் பதிகம்
பாடினார் பரவினார் பணிந்தார்

## திருவுந்தியார்

அகளமாய் யாரும் அறிவரிதப் பொருள்
சகளமாய் வந்தென்று உந்தீபற
தானாகத் தந்தது என்று உந்தீபற

வைய முழுது மலக்கயங் கண்டிடும்
உய்ய வந்தானுரை உந்தீபற
உண்மை உணர்ந்தார் என்று உந்தீபற.

## திருக்குறள்

வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.

நீரின்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின்றி அமையாது ஒழுக்கு

## அம்மன் துதி

துணையும் தொழும் தெய்வமும் பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமும் கையில்
அணையும் திரிபுர சுந்தரி யாவது அறிந்தனமே.

## முருகன் துதி

தண்டாயுதமும் தணிவேலும் தன கரத்தில்
கொண்டாடல் செய்கின்ற குருநாதர் வண்டாடும்
செங்கடம்பு பூத்த திண்தோள் சேவகனே நீ எனது
சங்கடங்கள் எல்லாம் தவிர்.

ஏகம்பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுருவானாய் போற்றி

# செவ்வாய்க்கிழமை

## முதல் திருமுறை

எய்யா வென்றித் தானவரூர் மூன்றெரி செய்த
மையார் கண்டன் மாதுமை வைகும் திருமேனிச்
செய்யா வெண்ணீறணிவான் திகழ்பொற் பதிபோலும்
பொய்யா நாவின் அந்தணர் வாழும் புறவம்மே.

## இரண்டாம் திருமுறை

மட்டிட்ட புன்னை அம் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

## மூன்றாம் திருமுறை

இடரினும் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே

இதுவோ எமை ஆளுமாறு ஈவதொன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன்னருள் ஆவடுதுறை அரனே.

## நான்காம் திருமுறை

சிவனெனும் ஓசையல்லது அறையோ
உலகில் திருநின்ற செம்மையுளதே
அவனுமோர் ஐயம் உண்ணி அதளதாடை
ஆவது அதன் மேல் ஓர் ஆடல் அரவம்
கவண் அளவு உள்ள உள்கு கரிகாடு
கோயில் கலனாவதோடு கருதில்
அவனது பெற்றி கண்டும் அவன் நீர்மை
கண்டும் அகனேர்வர் தேவர் அவரே

## ஐந்தாம் திருமுறை

நிறைக்க வாலியள் அல்லள் இந்நேரிழை
மறைக்க வாலியள் அல்லள் இம் மாதராள்
பிறைக்க வாலம் பெரும் புனல் ஆவடு
துறைக் கவாலியோடு ஆடிய சுண்ணமே.

## ஆறாம் திருமுறை

திருதிமையால் ஐவரையுங் காவல் ஏவித்
திகையாதே சிவாயநம என்னுஞ் சிந்தைச்
சுருதிதனைத் துயக்கறுத்துத் துன்ப வெள்ளக்
கடல்நீந்திக் கரையேறுங் கருத்தே மிக்குப்
பரிதிதனைப் பற்பறித்த பாவ நாசா
பரஞ்சுடரே என்றுஎன்று பரவி நாளுங்
கருதிமிகத் தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

## ஏழாம் திருமுறை

வெய்ய விரிசுடரோன் மிகு தேவர் கணங்கள் எல்லாம்
செய்ய மலர்கள் இடமிகு செம்மையுள் நின்றவனே
மையார் பூம்பொழில் சூழ் மழபாடியுள் மாணிக்கமே
ஐயா நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே.

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

செம்மைநலம் அறியாத சிதடரொடும் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன் தான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மைஎனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே.

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

பைவாய் அரவரை அம்பலத்து எம்பரன் பைங்கயிலைச்
செவ்வாய்க் கருங்கண் பெரும்பணைத் தோள் சிற்றிடைக் கொடியை
மொய்வார் கமலத்து முற்றிழை இன்றென் முன்னைத் தவத்தால்
இவ்வாறு இருக்குமென்றே நிற்பதென்றும் என்இன்னுயிரே

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

செய்யகோடுடன் கமலமலர்சூழ் தரு
தில்லை மாமறையோர்கள் தாந்தொழ
வையம் உய்ய நின்று
மகிழ்ந்தாடு சிற்றம்பலவன்
செய்யவாயின் முறுவலும் திகழும்
திருக்காதும் காதினில் மாத்திரைகளோடு
ஐயதோடுமன்றே
அடியேனை ஆட்கொண்டனவே.

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

சேவிக்க வந்தயன் இந்திரன்
செங்கண்மால் எங்கும் திசைதிசையன
கூவிக் கவர்ந்து நெருங்கிக்
குழாங் குழாமாய் நின்று கூத்தாடும்
ஆவிக்கு அமுதை என் ஆர்வத்
தனத்தினை அப்பனை ஒப்பமரர்
பாவிக்கும் பாவகத்து அப்புறத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதனிடம்
ஒள்ளிய மந்தன் இரவி செவ்வாய் வலம்
வள்ளிய பொன்னே வளரும் பிறையிடம்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே

## பதினோராம் திருமுறை

பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக்குன்றம்
தன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே

## பன்னிரண்டாம் திருமுறை

செம்மைபெற எடுத்த திருத் **தோடுடைய செவியன்** எனும்
மெய்ம்மை மொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்
தம்மை அடையாளங்களுடன் சாற்றித் தாதையார்க்கு
எம்மை இது செய்தபிரான் இவனன்றே என இசைத்தார்

## திருக்களிற்றுப்படியார்

தம்மிற் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்
தம்மிற் தலைப்படுதறாம் உணரின் - தம்மில்
நிலைப்படுவரோர் இருவர் நீக்கி நிலையாக்கித்
தலைப்படுவர் தாமத் தலை.

## திருக்குறள்

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.

அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல

## அம்மன் துதி

மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த
புனிதரும் நீயும்என் புந்தி எந்நாளும் பொருந்துகவே.

## முருகன் துதி

எழும்போதும் வேலும் மயிலும் என்பேன் எழுந்தே மகிழ்ந்து
தொழும் போதும் வேலும் மயிலும் என்பேன் தொழுதே உருகி
அழும்போதும் வேலும் மயிலும் என்பேன் அடியேன் சடலம்
விழும்போதும் வேலும் மயிலும் என்பேன் செந்தில் ஆண்டவனே.



காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.



# புதன்கிழமை

## முதல் திருமுறை

ஓடே கலன் உண்பதும் ஊர் இடுபிச்சை
காடே இடமாவது கல்லால் நிழல் கீழ்
வாடா முலை மங்கையுந் தானுமகிழ்ந்து
ஈடா உறைகின்ற இடை மருதீதோ.

## இரண்டாம் திருமுறை

எண்ணில் ஈரமும் உடையார் எத்தனையோ இவர் அறங்கள்
கண்ணும் ஆயிரம் உடையார் கையுமொர் ஆயிரம் உடையார்
பெண்ணும் ஆயிரம் உடையார் பெருமை ஓராயிரம் உடையார்
வண்ணம் ஆயிரம் உடையார் வாழ்கொளி புத்தூருளாரே.

## மூன்றாம் திருமுறை

சேடர் தேவன் குடித் தேவர் தேவன்றனை
மாடமோங்கும் பொழில் மல்கு தண் காழியான்
நாட வல்ல தமிழ் ஞானசம்பந்தன
பாடல் பத்தும் வல்லார்க்கு இல்லையாம் பாவமே.

## நான்காம் திருமுறை

ஆதித்தன் அங்கி சோமன் அயனொடு மால் புதனும்
போதித்து நின்றுலகில் போற்றிசைத்தார் இவர்கள்
சோதித்தார் ஏழுலகும் சோதியுள் சோதியாகிப்
பாதிப் பெண் உருவமானார் பழனத்து எம் பரமனாரே.

## ஐந்தாம் திருமுறை

செய்ய மேனியன் தேனொடு பால் தயிர்
நெய்யதாடிய நீலக் குடியரன்
மையலாய் மறவா மனத்தார்க்கெலாம்
கையில் ஆமலக் கனி ஒக்குமே.

## ஆறாம் திருமுறை

நோதங்கம் இல்லாதார் நாகம் பூண்டார்
நூல் பூண்டார் நூன்மேல் ஓர் ஆமை பூண்டார்
பேய் தங்கு நீள்காட்டில் நட்ட மாடிப்
பிறை சூடுஞ் சடை மேலோர் புனலுஞ் சூடி
ஆதங்கு பைங்குழலாள் பாகங் கொண்டார்
அனல் கொண்டார் அந்திவாய் வண்ணங் கொண்டார்
பாதங்க நீறேற்றார் பைங்கணேற்றார்
பலியேற்றார் பந்தணை நல்லூராரே

## ஏழாம் திருமுறை

பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்னானைக் குடபாலின் வடபாலின் குணபால்
சேராத சிந்தையான் செக்கர்வான் அந்தி
அன்னானை அமரர்கள் தம் பெருமானைக் கருமானின்
உரியானை அதிகை மா நகருள் வாழ்பவனை
என்னானை எறி கெடில வட வீரட்டானத்து
உறைவானை இறைபோது இகழ்வள் போலியானே.

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

வெறுப்பனவே செய்யும் என் சிறுமையை, நின் பெருமையினால்
பொறுப்பவனே! அராப் பூண்பவனே! பொங்கு கங்கை சடைச்
செறுப்பவனே! நின் திருவருளால், என் பிறவியை வேர்
அறுப்பவனே! உடையாய்! உன் அடைக்கலமே.

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

தேமாம் பொழிற்றில்லைச் சிற்றம்பலத்து விண்ணோர் வணங்க
நாமா தரிக்க நடம்பயில் வோனை நண்ணாதவரின்
வாமான் கலைசெல்ல நின்றார் கிடந்தநம் அல்லல் கண்டால்
தாமா அறிகிலராயின் என்நாம் சொல்லுந் தன்மைகளே.

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

நையாத மனத்தினனை நைவிப்பான் இத்தெருவே
ஐயா! நீ உலாப்போந்த அன்றுமுதல் இன்றுவரை
கையாரத்தொழு(து) அருவி கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ? அருள் கோடைத் திரைலோக்கிய சுந்தரனே?

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

சொல்லாண்ட சுருதிப்பொருள்
சோதித்த தூய்மனத் தொண்டருள்ளீர்
சில்லாண்டிற் சிதையுஞ் சில
தேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத்திரள்
மேரு விடங்கண் விடைப்பாகன்
பல்லாண்டு என்னும் பதங்கடந்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே

## பதினோராம் திருமுறை

நீரே எருதேறும் நின்மலனார் ஆவீரும்
நீரே நெடுவானில் நின்றீரும் நீரே
நெருப்பாய தோற்றத்து நீளாரம் பூண்டீர்
நெருப்பாய தோற்றம் நிலைத்து.

## பன்னிரண்டாம் திருமுறை

தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா
வீரத்தார் எல்லார்க்குந் தனித்தனிவேறு அடியேன் என்று
ஆர்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம் அருள்செய்வார்.

## இருபா இருபது

அறிவறியாமை யிரண்டும் அடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே - அறிவோ
அறியேனோ யாதென்று கூறுகேன் ஆய்ந்து
குறிமாறு கொள்ளாமற் கூறு.

## திருக்குறள்

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்,
நல்லாற்றின் நின்ற துணை.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

## அம்மன் துதி

தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத் தீந்தமிழின் ஒழுகு நறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கை அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்
ஏற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்

உடுக்கும் புவனங் கடந்து நின்ற
ஒருவன் திருஉள்ளத்தில் அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிர் ஓவியமே மதுகரம்வாய்
மடுக்குங் குழற்காடு ஏந்தும் இள
வஞ்சிக்கொடியே வருகவே!
மலையத்துவசன் பெற்ற பெரு
வாழ்வே வருக வருகவே.

## முருகன் துதி

அருவமும் உருவுமாகி அநாதியாய் பலவாய் ஒன்றாய்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகி
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய

# வியாழக்கிழமை

## முதல் திருமுறை

நன்று உடையானைத் தீயது இலானை நரை வெள்ளேறு
ஒன்று உடையானை உமை ஒரு பாகம் உடையானைச்
சென்று அடையாத திரு உடையானைச் சிராப்பள்ளிக்
குன்று உடையானைக் கூற என் உள்ளம் குளிரும்மே.

## இரண்டாம் திருமுறை

வில் ஆர் வரை ஆக மா நாகம் நாண் ஆக வேடம் கொண்டு
புல்லார் புரமூன்று எரித்தார்க்கு இடம்போலும் புலியும் மானும்
அல்லாத சாதிகளும் அம்கழல் மேல் கைகூப்ப அடியார் கூடிச்
செல்லா அருநெறிக்கே செல்ல அருள் புரியும் திரு நணாவே.

## மூன்றாம் திருமுறை

பைங்கோட்டு மலர்ப் புன்னைப் பறவைகாள் பயப்பு ஊரச்
சங்கு ஆட்டம் தவிர்த்து என்னைத் தவிரா நோய் தந்தானே
செங்காட்டங்குடி மேய சிறுத்தொண்டன் பணி செய்ய
வெங்காட்டுள் அனல் ஏந்தி விளையாடும் பெருமானே.

## நான்காம் திருமுறை

சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி அம்மான்
அவன் எனை ஆட்கொண்டு அளித்திடும்ஆகில் அவன்தனை யான்
பவன் எனும் நாமம் பிடித்துத் திரிந்து பல் நாள் அழைத்தால்
இவன் எனைப் பல்நாள் அழைப்பு ஒழியான் என்று எதிர்ப்படுமே

## ஐந்தாம் திருமுறை

வைத்த மாடும் மனைவியும் மக்கள் நீர்
செத்த போது செறியார் பிரிவதே
நித்த நீலக் குடியரனைந் நினை
சித்தமாகிற் சிவகதி சேர்திரே.

## ஆறாம் திருமுறை

நம்பனை நால்வேதங் கரை கண்டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லால் இருந்தான் தன்னைக்
கற்பகமாய் அடியார்கட்கு அருள் செய்வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை ஆவடுதண்டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்து உய்ந்தேனே

## ஏழாம் திருமுறை

வான நாடனே வழித்துணை மருந்தே
மாசு இலா மணியே மறைப்பொருளே
ஏன மா எயிறு ஆமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்பு உடையானே
தேன் நெய் பால் தயிர் ஆட்டு உகந்தானே
தேவனே திரு ஆவடுதுறையுள்
ஆனையே எனை அஞ்சல் என்று அருளாய்
ஆர் எனக்கு உறவு அமரர்கள் ஏறே.

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

காட்டகத்து வேடன், கடலில் வலை வாணன்,
நாட்டில் பரிப் பாகன், நம் வினையை - வீட்டி
அருளும் பெருந்துறையான் அம் கமலபாதம்,
மருளும் கெட, நெஞ்சே! வாழ்த்து.

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

பரம்பயன் தன்னடியேனுக்குப் பார்விசும் பூடுருவி
வரம்பயன் மாலறியாத் தில்லை வானவன் வானகஞ்சேர்
அரம்பையர் தம்மிடமோ அன்றி வேழத்தின் என்புநட்ட
குரம்பையர் தம்மிடமோ இடந் தோன்றுமிக் குன்றிடத்தே.

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

ஆறாத பேரன்பின் அவருள்ளம் குடிகொண்டு
வேறாகப் பலர்சூழ வீற்றிருத்தி அதுகொண்டு
வீறாடி இவள் உன்னைப் பொதுநீப்பான் விரைந்தின்னம்
தேறாள்; தென் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே!

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

புரந்தரன் மாலயன் பூசலிட்(டு)
ஓலமிட்(டு) இன்னம் புகலரிதாய்
இரந்திரந்(து) அழைப்ப என்னுயிராண்ட
கோவினுக்கு என் செயவல்லமென்றும்
கரந்துங் கரவாத கற்பக
னாகிக் கரையில் கருணைக்கடல்
பரந்தும் நிரந்தும் வரம்பிலாப்
பாங்கற்கே பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

மந்திர மாவதும் மாமருந் தாவதும்
தந்திர மாவதும் தானங்க ளாவதும்
சுந்தர மாவதும் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே.

## பதினோராம் திருமுறை

பிழையாயினவே பெருக்கி நின்
பெய்கழற் அன்புதன்னில்
நுழையாத சிந்தையினேனையும்
மந்தாகினித்து வலை
முழையார் தருதலை மாலை
முடித்த முழுமுதலே
புழையார் கரியுரித் தோய் தில்லை
நாத பொறுத்தருளே

## பன்னிரண்டாம் திருமுறை

இயற்பகை முனிவா ஓலம்! ஈண்டு நீ வருவாய் ஓலம்!
அயர்ப்பிலா தானே ஓலம்! அன்பனே ஓலம்! ஓலம்!
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம்! என்றான்
மயக்கறு மறை ஒலிட்டு மாலயன் தேட நின்றான்.

## திருவருட்பயன்

பதிமுது நிலை.
அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து.

உன்னும்உளது ஐயம்இலது உணர்வாய் ஓவாது
மன்னுபவம் தீர்க்கும் மருந்து

## திருக்குறள்

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

## அம்மன் துதி

பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே பின்கரந்தவளே கறைக் கண்டனுக்கு
மூத்தவளே என்றும் மூவா முகுந்தற்(கு) இளையவளே
மாத்தவளே உன்னை அன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே.

## முருகன் துதி

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் - பன்னிருகை
கோலப்பா வானோர் கொடிய வினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே.



பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி

# வெள்ளிக்கிழமை

## முதல் திருமுறை

சங்கொளி இப்பு சுறாமகரம்
தாங்கி நிரந்து தரங்கம் மேன்மேல்
பொங்கொளி நீர்சுமந்து ஓங்கு செம்மைப்
புகலி நிலாவிய புண்ணியனே
எங்கள் பிரான் இமையோர்கள் பெம்மான்
எம்மிறையே இதுஎன்கொல் சொல்லாய்
வெங்கதிர் தோய்பொழில் சூழ்மிழலை
விண்ணழி கோயில் விரும்பியதே

## இரண்டாம் திருமுறை

பாரும் நீரொடு பல்கதிர் இரவியும் பனிமதி ஆகாசம்
ஓரும் வாயுவும் ஒண்கனல் வேள்வியில் தலைவனுமாய் நின்றார்
சேரும் சந்தனம் அகிலொடு வந்திழி செழும்புனல் கோட்டாறு
வாரும் தண்புனல் சூழ் சிரபுரம் தொழும் அடியவர் வருந்தாரே.

## மூன்றாம் திருமுறை

ஊழியும் இன்பமும் காலமுமாகி உயரும் தவமாகி
ஏழிசையின் பொருள் வாழும் வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி
நாழிகையும் பல ஞாயிறாகி நளிர் நாரையூர் தன்னில்
வாழியர் மேதகு மைந்தர் செய்யும் வகையின் விளைவாமே.

## நான்காம் திருமுறை

விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர்
வேத விதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயு வல்லர் செறு தீயுமல்லர்
தெளி நீருமல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒரு பாகமாக
அருள் காரணத்தில் வருவார்
எரியரவார மார்பர் இமையாரும்
அல்லர் இமைப்பாரும் அல்லர் இவரே

## ஐந்தாம் திருமுறை

சந்திரன்னொடு சூரியர் தாமுடன்
வந்து சீர் வழிபாடுகள் செய்தபின்
ஐந்தலை அரவின் பணி கொண்டருள்
மைந்தர் போல் மணி நாகேச்சரவரே

## ஆறாம் திருமுறை

ஆறு சடைக்கு அணிவர் அங்கைத் தீயர்
அழகர் படை உடையர் அம்பொற் தோள்மேல்
நீறு தட வந்து இடபம் ஏறி
நித்தம் பலிகொள்வர் மொய்த்த பூதம்
கூறுங் குணமுடையர் கோவணத்தர்
கோடால வேடத்தர் கொள்கை சொல்லின்
ஈறும் நடுவும் முதலுமாவார்
இடைமருது மேவியிடங் கொண்டாரே

## ஏழாம் திருமுறை

காலமும் ஞாயிறும் ஆகி நின்றார் கழல் பேணவல்லார்
சீலமும் செய்கையும் கண்டு உகப்பார் அடி போற்றிசைப்ப
மாலொடு நான்முகன் இந்திரன் மந்திரத்தால் வணங்க
நீல நஞ்சு உண்டவருக்கு இடமாம் திரு நின்றியூரே

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

அருணன் இந்திரன் திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம் நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நயனக்
கடிமலர் மலர் அமற்றண்ணல் அம் கண்ணாம்
திரள் நிரை அறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகடலே பள்ளி எழுந்தருளாயே

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

காமரை வென்ற கண்ணோன் தில்லைப் பல்கதிரோன் அடைத்த
தாமரை இல்லின் இதழ்க் கதவம் திறந்தோ தமியே
பாமரை மேகலை பற்றிச் சிலம் பொதுக்கிப் பையவே
நாமரை யாமத்து என்னோ வந்து வைகி நயந்ததுவே.

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

தக்கன் வெங்கதிரோன் சலந்தரன் பிரமன்
சந்திரன் இந்திரன் எச்சன்
மிக்க நெஞ்சு அரக்கன் புரம் கரி கருடன்
மறலிவேள் இவர்மிகை செகுத்தோன்
திக்கெலாம் நிறைந்த புகழ்த்திரு வீழி
மிழலையான் திருவடி நீழல்கீழ்ப்
புக்கிருந்தவர் தம் பொன்னடிக் கமலப்
பொடியணிந்து அடிமை பூண்டேனே.

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

ஆரார் வந்தார் அமரர்
குழாத்தில் அணியுடை ஆதிரை நாள்
நாராயணனொடு நான்முகன்
அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்
குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும்
ஆடியும் பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

சந்திரன் சூரியன் தற்பரன் தாணுவில்
சந்திரன் தானும் தலைப்படும் தன்மையைச்
சந்தியிலே கண்டு தானாம் சகமுகத்து
உந்திச் சமாதி உடைஒளி யோகியே

## பதினோராம் திருமுறை

அம்பரம் கால்அனல் நீர்நிலம் திங்கள் அருக்கன் அணு
அம்பரம் கொள்வதொர் வேழத்து உரியவன் தன்னுருவாம்
எம்பரன் கச்சியுள் ஏகம்பத்தான் இடையா அடைவான்
நம்பரன் தன்னடியார் அறிவார்கட்கு நற்றுணையே

## பன்னிரண்டாம் திருமுறை

கதிரவன் உச்சி நண்ணக் கடவுள்மால் வரையின் உச்சி
அதிர்தரும் ஓசை ஐந்தும் ஆர்கலி முழக்கம் காட்ட
இதுஎன்கொல் நாணா என்றார்க்கு இம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து
மதுமலர் ஈக்கள் மொய்த்து மருங்கெழும் ஒலிகொள் என்றான்

## சிவப்பிரகாசம்

பல்கலை ஆகம வேதம் இவையினுங் கருத்துப்
பதி பசு பாசந் தெரித்தல் பதி பாரமே அதுதான்
நிலவு மரு உருவின்றிக் குணம் குறிகளின்றி
நின் மலமா யேகமாய் நித்த மாசி
உலகில் உயிர்க்கு உணர்வாகி அசலமாகி
அகண்டிதமாய் ஆனந்த வருவாயன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வது தற்சிவமென்பர் தெளிந்துளோரே.

## திருக்குறள்

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்.

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.

## அம்மன் துதி

அதிசயம் ஆன வடிவுடையாள், அரவிந்தம் எல்லாம்
துதிசய ஆனன சுந்தர வல்லி, துணை இரதி
பதிசயமானது அபசயமாக, முன் பார்த்தவர் தம்
மதிசய மாகவன்றோ வாம பாகத்தை வவ்வியதே.

## முருகன் துதி

எந்த வேலையு மெம்பசித் தீப்புறந்
தந்த வேலை தரும் பயனென் கொலோ
அந்த வேலை சுவறலகங் கொளா
முந்த வேலை விட்டோன்கழன் முன்னுவாம்.

ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
சீர் ஆர் திருவையாறா போற்றி

## சனிக்கிழமை

### முதல் திருமுறை

போகம் ஆர்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன் அகலம்
பாகம் ஆர்த்த பைங்கண் வெள்ஏற்று அண்ணல் பரமேட்டி
ஆகம் ஆர்த்த தோல் உடையன் கோவண ஆடையின்மேல்
நாகம் ஆர்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.

### இரண்டாம் திருமுறை

பண்ணினார் படி ஏற்றர் நீற்றர் மெய்ப்
பெண்ணினார் பிறை தாங்கு நெற்றியர்
கண்ணினார் கருவூருள் ஆன்நிலை
நண்ணினார் நமை ஆளும் நாதரே.

### மூன்றாம் திருமுறை

மங்கையர்க்கு அரசி வளவர்கோன் பாவை
வரி வளைக் கைம் மடமானி
பங்கயச்செல்வி பாண்டிமா தேவி
பணி செய்து நாள்தொறும் பரவப்
பொங்கு அழல் உருவன் பூதநாயகன் நால்
வேதமும் பொருள்களும் அருளி
அம் கயல்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே.

### நான்காம் திருமுறை

படைக்கலமாக உன் நாமத்து எழுத்து அஞ்சும் என் நாவில் கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப்பும் உனக்கு ஆட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித் தூ நீறு அணிந்து உன்
அடைக்கலம் கண்டாய் அணி தில்லைச் சிற்றம்பலத்து அரனே.

### ஐந்தாம் திருமுறை

தங்கலப்பிய தக்கன் பெருவேள்வி
அங்கு அலக்கழித்து ஆரருள் செய்தவன்
கொங்கலர்க் குழற் கொம்பனையாளொடு
மங்கலக்குடி மேய மணாளனே.

## ஆறாம் திருமுறை

குலம் பொல்லேன் குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிது உடையேன் கோலமாய
நலம் பொல்லேன் நான் பொல்லேன் ஞானி அல்லேன்
நல்லாரொடு இசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கு அல்லேன் விலங்கு அல்லாது ஒழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப் பெரிதும் பேச வல்லேன்
இலம் பொல்லேன் இரப்பதே ஈயமாட்டேன்
என் செய்வான் தோன்றினேன் ஏழையனே.

## ஏழாம் திருமுறை

முத்தா முத்தி தர வல்ல முகிழ்மென் முலையாள் உமை பங்கா
சித்தா சித்தித் திறம் காட்டும் சிவனே தேவர்சிங்கமே
பத்தா பத்தர்பலர் போற்றும் பரமா பழையனூர் மேய
அத்தா ஆலங்காடா உன் அடியார்க்கு அடியேன் ஆவேனே

## எட்டாம் திருமுறை – திருவாசகம்

தெங்குலவு சோலைத் திருஉத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

## எட்டாம் திருமுறை – திருக்கோவையார்

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணர்ஒக்கல்
சீரணி சிந்தாமணி அணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையென் தக்கோர் தஞ்சங்க நிதிவிதிசேர்
ஊருணி உற்றவர்க் கூரன் மற்றியாவர்க்கும் ஊதியமே.

## ஒன்பதாம் திருமுறை – திருவிசைப்பா

சித்தனே! அருளாய்; செங்கணா! அருளாய்,
சிவபுர நகருள் வீற்றிருந்த
அத்தனே! அருளாய்; அமரனே! அருளாய்;
அமரர்கள் அதிபனே! அருளாய்;
தத்துநீர்ப் படுகர்த் தண்டலைச் சூழல்
சாட்டியக் குடியுள் ஏழ் இருக்கை
முத்தனே! அருளாய்; முதல்வனே! அருளாய்;
முன்னவா துயர்கெடுத்(து) எனக்கே.

## ஒன்பதாம் திருமுறை – திருப்பல்லாண்டு

சீரும் திருவும் பொலியச்
சிவலோகநாயகன் சேவடிக்கீழ்
ஆறும் பெறாத அறிவு
பெற்றேன்; பெற்றதார் பெறுவாருகில்?
ஊரும் உலகுங் கழற
உழறி உமை மணவாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும்
பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே.

## பத்தாம் திருமுறை

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே ஆமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே

## பதினோராம் திருமுறை

வாயிலே வைக்கும் அளவில் மருந்தாகித்
தீய பிறவிநோய் தீர்க்குமே - தூய
ஏகம்பெருமா தேவியொடு மன்னு கயிலாயத்து
எம்பெருமான் ஓரஞ் செழுத்து

## பன்னிரண்டாம் திருமுறை

குழைக்கலையும் வடிகாதில் கூத்தனார் அருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைகிழத்தியார் தம்பால்
இழைக்கும் வினைப்பயன் சூழ்ந்த இப்பிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்கு நெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்.

## உண்மை விளக்கம்.

காலம் நியதி கருதும் கலை வித்தை
ஏல இராகம் புருடனே மாயை - மால் அறவே
சொன்னோம் அடைவாகச் சொன்ன இவை தம் உண்மை
உன்னி உரைக்க நாம் உற்று.

## திருக்குறள்

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

## அம்மன் துதி

மூவர் மொழிந்த திருமுறைப்பண்
முறையிற் கரத்தாலொத்தறுத்து
முதிருந் தமிழ் வல்லவரோத
முற்றிடு செவியாற்றாம்பழகிப்

பூவைகளுமஞ் சிறைச்சுகமும்
புதல்வண்டினங்கள் சுதிகூட்டப்
புகலு மதைக்கின்னரமிதுனர்
புகழ்ந்து கேட்கும் பொழில்பலவாய்

ஏவிற்றிகழும் விழிமடவார்
இரும்பந்தடிக்கும் பொழுதிலவர்
இட்ட மணிகள் பலசிதறி
எங்கும் பரந்தல்லிருள்சீத்துத்

தேவருலகைத் தகுந்துறைசைச்
செல்வீ! தாலோ தாலேலோ!!
செங்கண் விடையேற்றினர் மேவுஞ்
செல்வீ! தாலோதாலேலோ!!

## முருகன் துதி

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே - ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

## நமச்சிவாயத்திருப்பதிகங்கள்

பொது — திருஞானசம்பந்தர்
பண் - கௌசிகம் — மூன்றாம் திருமுறை

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக்(கு) உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. 1

நம்புவார் அவர் நாவில் நவிற்றினால்
வம்பு நாள்மலர் வார்மது ஒப்பது
செம்பொனார் திலகம் உலகுக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சிவாயவே. 2

நெக்குள் ஆர்வம் மிகப் பெருகி நினைந்து
அக்கு மாலைகொடு அங்கையில் எண்ணுவார்
தக்க வானவராய்த் தகுவிப்பது
நக்கன் நாமம் நமச்சிவாயவே 3

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால்
நயம் வந்து ஓதவல்லார் தமை நண்ணினால்
நியமந்தான் நினைவார்க்கு இனியான் நெற்றி
நயனன் நாமம் நமச்சிவாயவே. 4

கொல்வாரேனும் குணம் பல நன்மைகள்
இல்லாரேனும் இயம்புவர் ஆயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவர் என்பரால்
நல்லார் நாமம் நமச்சிவாயவே. 5

மந்தரம் அன பாவங்கள் மேவிய
பந்தனையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்
நந்தி நாமம் நமச்சிவாயவே. 6

நரகம் ஏழ்புக நாடினர் ஆயினும்
உரை செய்வாயினராயின் உருத்திரர்
விரவியே புகுவித்திடும் என்பரால்
வரதன் நாமம் நமச்சிவாயவே. 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல் மேல்
தலங்கொள் கால்விரல் சங்கரன் ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாமம் நமச்சிவாயவே. 8

போதன் போதன கண்ணனும் அண்ணல்தன்
பாதந்தான் முடி நேடிய பண்பராய்
யாதும் காண்பரிதாகி அலந்தவர்
ஓதும் நாமம் நமச்சிவாயவே. 9

கஞ்சி மண்டையர் கையில் உண் கையர்கள்
வெஞ்சொல் மிண்டர் விரவிலர் என்பரால்
விஞ்சை அண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சிவாயவே. 10

நந்தி நாமம் நமச்சிவாய எனும்
சந்தையால் தமிழ் ஞானசம்பந்தன் சொல்
சிந்தையால் மகிழ்ந்து ஏத்தவல்லார் எல்லாம்
பந்த பாசம் அறுக்க வல்லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

பொது
*பண் - காந்தார பஞ்சமம்*

திருஞானசம்பந்தர்
மூன்றாம் திருமுறை

துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்று அடி வாழ்த்த வந்த கூற்(று)
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே. 1

மந்திர நான்மறை ஆகி வானவர்
சிந்தையுள் நின்று அவர்தம்மை ஆள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே. 2

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்து
ஏனை வழி திறந்து ஏத்துவார்க்கு இடர்
ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே. 3

நல்லவர் தீயர் எனாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்ல நமன் தமர் கொண்டு போமிடத்(து)
அல்லல் கெடுப்பன அஞ்செழுத்துமே. 4

கொங்கலர் வன்மதன் வாளி ஐந்து அகத்து
அங்குள பூதமும் அஞ்சு ஐம்பொழில்
தங்கு அரவின்படம் அஞ்சும் தம்முடை
அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே. 5

தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினை அடர்த்து எய்தும் போழ்தினும்
அம்மையினும் துணை அஞ்செழுத்துமே. 6

வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்
பீடை கெடுப்பன பின்னை நாள்தொறும்
மாடு கொடுப்பன மன்னு மாநடம்
ஆடி உகப்பன அஞ்செழுத்துமே. 7

வண்டமர் ஓதி மடந்தை பேணின
பண்டை இராவணன் பாடி உய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்தபின் அவர்க்(கு)
அண்டம் அளிப்பன அஞ்செழுத்துமே. 8

கார்வணன் நான்முகன் காணுதற்கு ஒணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாள்தொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்(கு)
ஆர்வணம் ஆவன அஞ்செழுத்துமே. 9

புத்தர் சமண் கழுக்கையர் பொய்கொளாச்
சித்தத்தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணிவார் வினைப் பகைக்கு
அத்திர மாவன அஞ்செழுத்துமே. 10

நற்றமிழ் ஞானசம்பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றம் இல்மாலை ஈரைந்தும் அஞ்செழுத்(து)
உற்றன வல்லவர் உம்பர் ஆவரே. 11

திருநாவுக்கரசர்
நான்காம் திருமுறை

பண் - காந்தார பஞ்சமம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே. 1

பூவினுக்கு அருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக்கு அருங்கலம் அரன் அஞ்சாடுதல்
கோவினுக்கு அருங்கலம் கோட்டம் இல்லது
நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே. 2

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ் அழல்
உண்ணிய புகில் அவை ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே. 3

இடுக்கண் பட்(டு) இருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கிற் பிரான் என்று வினவுவோம் அல்லோம்
அடுக்கல் கீழ்க் கிடக்கினும் அருளின் நாம் உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே. 4

வெந்தநீ(று) அருங்கலம் விரதிகட்கெல்லாம்
அந்தணர்க்(கு) அருங்கலம் அருமறை ஆறங்கம்
திங்களுக்(கு) அருங்கலம் திகழும் நீண்முடி
நங்களுக்(கு) அருங்கலம் நமச்சிவாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கல்லால்
நலம் இலன் நாள்தொறும் நல்குவான் நலன்
குலமிலராகிலும் குலத்துக்கு ஏற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே. 6

வீடினார் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினார் அந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினேன் ஓடிச் சென்(று) உருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சிவாயவே. 7

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே. 8

முன்னெறியாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியே சரண் ஆதல் திண்ணமே
அந்நெறியே சென்று அங்கு அடைந்தவர்க்கெலாம்
நன்னெறியாவது நமச்சிவாயவே. 9

மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சிவாயப் பத்(து)
ஏத்தவல்லார் தமக்கு இடுக்கண் இல்லையே. 10

திருச்சிற்றம்பலம்

*திருப்பாண்டிக் கொடுமுடி* — *சுந்தரமூர்த்தி நாயனார்*
*பண் - பழம்பஞ்சுரம்* — *ஏழாம் திருமுறை*

மற்றுப் பற்று எனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன்
கற்றவர் தொழுதேத்தும் சீர்க் கறையூரில் பாண்டிக் கொடுமுடி
நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 1

இட்ட னும் அடி ஏத்துவார் இகழ்ந்திட்ட நாள் மறந்திட்ட நாள்
கெட்ட நாள் இவை என்றலால் கருதேன் கிளர்புனல் காவிரி
வட்டவாசிகை கொண்டு அடி தொழுது ஏத்து பாண்டிக் கொடுமுடி
நட்டவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 2

ஓவும் நாள் உணர்வு அழியும் நாள் உயிர்போகும் நாள் உயர் பாடைமேல்
காவும் நாள் இவை என்றலால் கருதேன் கிளர் புனல் காவிரிப்
பாவு தண் புனல் வந்திழி பரஞ்சோதி பாண்டிக் கொடுமுடி
நாவலா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 3

எல்லையில் புகழ் எம்பிரான் எந்தை தம்பிரான் என்பொன் மாமணி
கல்லை உந்தி வளம் பொழிந்திழி காவிரி அதன் வாய்க்கரை
நல்லவர் தொழுதேத்தும் சீர்க்கறையூரில் பாண்டிக் கொடுமுடி
வல்லவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 4

அஞ்சினார்க்கு அரண் ஆதியென்று அடியேனும் நான் மிக அஞ்சினேன்
அஞ்சல் என்று அடித்தொண்டனேற்கு அருள் நல்கினாய்க்கு
அழிகின்றது என்
பஞ்சின் மெல்லடிப் பாவைமார் குடைந்து ஆடு பாண்டிக் கொடுமுடி
நஞ்சணி கண்ட நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 5

ஏடுவான் இளந் திங்கள் சூடினை என்பின் கொல் புலித் தோலின்மேல்
ஆடு பாம்பது அரைக்கு அசைத்த அழகனே அந்தண் காவிரிப்
பாடு தண்புனல் வந்திழி பரஞ்சோதி பாண்டிக் கொடுமுடிச்
சேடனே உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயே. 6

விரும்பி நின் மலர்ப் பாதமே நினைந்தேன் வினைகளும் விண்டனன்
நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெழில் பெற நின்ற காவிரிக்
கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதைமார் குடைந்தாடு பாண்டிக் கொடுமுடி
விரும்பனே உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே.

செம்பொன் நேர்சடையாய் திரிபுரம் தீயெழச் சிலை கோலினாய்
வம்புலாம் குழலாளைப் பாகம் அமர்ந்து காவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேல் குயில் கூவ மாமயில் ஆடு பாண்டிக் கொடுமுடி
நம்பனே உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 8

சாரணன் தந்தை எம்பிரான் எந்தை தம்பிரான் என்பொன் மாமணி என்று
பேரெ ணாயிர கோடி தேவர் பிதற்றி நின்று பிரிகிலார்
நாரணன் பிரமன் தொழுங் கறையூரில் பாண்டிக் கொடுமுடிக்
காரணா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே. 9

கோணிய பிறை சூடியைக் கறையூரில் பாண்டிக் கொடுமுடி
பேணிய பெருமானைப் பிஞ்ஞகப் பித்தனைப் பிறப்பில்லியைப்
பாணுலாவரி வண்டறை கொன்றைத் தாரனைப் படப் பாம்பரை
நாணனைத் தொண்டன் ஊரன் சொல்லிவை சொல்லுவார்க்கு
இல்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி

## சிவபுராணம்

மாணிக்கவாசகர்
எட்டாம் திருமுறை

நமச்சிவாய வாழ்க ! நாதன் தாள் வாழ்க !
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க !
கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க !
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க !
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க !
வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க !
பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க !
புறத்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க !
கரம்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க !
சிரம்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன்கழல் வெல்க !
ஈசன் அடி போற்றி ! எந்தை அடிபோற்றி !
தேசன் அடிபோற்றி ! சிவன் சேவடி போற்றி !
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி !
மாயப் பிறப்புஅறுக்கும் மன்னன் அடிபோற்றி !
சீரார் பெருந்துறை நம் தேவன் அடிபோற்றி !
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி !
சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன்யான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழல் இறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறைந்து எல்லையிலாதானே ! நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான் !
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா ! விமலா ! விடைப்பாகா வேதங்கள்
ஐயா ! எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே !

வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா !
பொய்யாயின எல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே !
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே !
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே !
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே !
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்கள் ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம் பெருமான் ! வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல் போர்த்து எங்கும் புழு அழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா ! உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்து உள்ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்து அருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே !
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே !
தேசனே ! தேனார் அமுதே ! சிவபுரனே !
பாசமாம்பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே !
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சம்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே !
ஆரா அமுதே ! அளவிலாப் பெம்மானே !
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே !
நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே !
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே !
அன்பருக்கு அன்பனே ! யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே ! தோன்றாப் பெருமையனே !
ஆதியனே ! அந்தம் நடுவாகி அல்லானே !

ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே !
கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே ! நுணுக்கரிய நுண் உணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே !
காக்கும் எம் காவலனே ! காண்பரிய பேரொளியே !
ஆற்றின்ப வெள்ளமே ! அத்தா மிக்காய் நின்ற
தோற்றச் சுடர் ஒளியாய் சொல்லாத நுண் உணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்து அறிவாம்
தேற்றனே ! தேற்றத்தெளிவே ! என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணார் அமுதே ! உடையானே !
வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் எம்ஐயா ! அரனேயோ ! என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே !
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே !
தில்லையுள் கூத்தனே ! தென்பாண்டி நாட்டானே !
அல்லற் பிறவி அறுப்பானே ! ஓஎன்று
சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

திருவாசகம்

சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்கும் ஆனந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே

# போற்றித்திருத்தாண்டகங்கள்

திருக்கயிலை

திருநாவுக்கரசர்
ஆறாம் திருமுறை

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆள் என்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத்து ஒலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 1

பிச்சாடல் பேயோடு உகந்தாய் போற்றி
பிறவி அறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவி என் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்றும் எய்தாய் போற்றி
போகாது என்சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாகம் அசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 2

மருவார் புரமூன்றும் எய்தாய்போற்றி
மருவி என் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி என்னைப் படைத்தாய்போற்றி
உள்ளாவி வாங்கி ஒளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி ஓடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 3

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்து என்தன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்கும் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ ஆடல் உகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 4

ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி எங்கும் பரந்தாய் போற்றி
பெயராது என் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வார் ஒருவரையும் இல்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 5

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவர் அறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாது என் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 6

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும் சொல் ஆனாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனும் தீ ஆனாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 7

இமையாது உயிராது இருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாகம் ஆகத்து அணைத்தாய் போற்றி
ஊழி ஏழான ஒருவா போற்றி
அமையா அருநஞ்சம் ஆர்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 8

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழும் தேவே போற்றி
சென்று ஏறி எங்கும் பரந்தாய் போற்றி

ஆவா அடியேனுக்கு எல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 9

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகலம் உடையாய் போற்றி
அடியும் முடியும் இகலி போற்றி
அங்கொன்று அறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலாய் என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 10

உண்ணாது உறங்காது இருந்தாய் போற்றி
ஓதாதே வேதம் உணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்து உகந்த ஈசா போற்றி
பண்ணார் இசையின் சொல்கேட்டாய் போற்றி
பண்டே என் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணாய் உலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. 11

### திருவாசகம்

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான்இதற் கிலன்ஓர்கைம் மாறே.

## திருத்தொண்டத்தொகை

சுந்தரமூர்த்தி நாயனார்

பண்: கொல்லிக்கெளவாணம் ஏழாம் திருமுறை

தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்தன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப் பொருளுக்கு அடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன் மிண்டற்கு அடியேன்
அல்லி மென் முல்லை யந்தார் அமர் நீதிக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 1

இலை மலிந்த வேல் நம்பி எறிபத்தர்க்கு அடியேன்
ஏனாதி நாதன் தன் அடியார்க்கும் அடியேன்
கலை மலிந்த சீர் நம்பி கண்ணப்பர்க்கு அடியேன்
கடவூரில் கலையன் தன் அடியார்க்கும் அடியேன்
மலை மலிந்த தோள் வள்ளல் மானக்கஞ்சாறன்
எஞ்சாத வாள் தாயன் அடியார்க்கும் அடியேன்
அலை மலிந்த புனல் மங்கை ஆனாயர்க்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 2

மும்மையால் உலகு ஆண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர் தம் அடியார்க்கும் அடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டு எழுந்த தாதை தாள் மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 3

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கு அரையன் தன் அடியார்க்கும் அடியேன்
பெரு நம்பி குலச்சிறை தன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்
ஒரு நம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலி புனல் சூழ் சாத்த மங்கை நீல நக்கர்க்கு அடியேன்
அரு நம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 4

வம்பறா வரி வண்டு மணம் நாற மலரும்
மது மலர் நல் கொன்றையான் அடியலால் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர் கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டம் மிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 5

வார் கொண்ட வனமுலையாள் உமை பங்கன் கழலே
மறவாது கல் எறிந்த சாக்கியர்க்கும் அடியேன்
சீர் கொண்ட புகழ் வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டம் குடிமேய சிறுத் தொண்டர்க்கு அடியேன்
கார் கொண்ட கொடை கழறிற்று அறிவார்க்கும் அடியேன்
கடல் காழி கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேல் கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 6

பொய் அடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்
பொழில் கருவூர்த் துஞ்சிய புகழ்ச் சோழர்க்கு அடியேன்
மெய் அடியான் நரசிங்க முனைஅரையர்க்கு அடியேன்
விரி திரை சூழ் கடல் நாகை அதிபத்தர்க்கு அடியேன்
கை தடிந்த வரி சிலையான் கலிக்கம்பன் கலியன்
கழல் சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர் கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 7

கறைக் கண்டன் கழல் அடியே காப்புக் கொண்டுஇருந்த
கணம் புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக் கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்ற சீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக் கொண்ட செம்பவளம் இருள் அகற்றும் சோதித்
தொன் மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக் கொண்ட வேல் நம்பி முனை அடுவார்க்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 8

கடல் சூழ்ந்த உலகு எல்லாம் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழல்சிங்கன் அடியார்க்கும் அடியேன்
மடல் சூழ்ந்த தார் நம்பி இடம்கழிக்கும் தஞ்சை
மன்னவனாம் செருத்துணை தன் அடியார்க்கும் அடியேன்

புடை சூழ்ந்த புலி அதள் மேல் அரவு ஆட ஆடி
பொன் அடிக்கே மனம் வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன்
அடல் சூழ்ந்த வேல் நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 9

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன் பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்
முழு நீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடி சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 10

மன்னிய சீர் மறை நாவன் நின்ற ஊர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகு ஆண்ட செங்கணார்க்கு அடியேன்
திருநீலகண்டத்துப் பாணனார்க்கு அடியேன்
என்னவனாம் அரன்அடியே அடைந்திட்ட சடையன்
இசை ஞானி காதலன் திருநாவலூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமை கேட்டு உவப்பார்
ஆரூரில் அம்மானுக்கு அன்பர் ஆவாரே. 11

திருச்சிற்றம்பலம்

## வாழ்த்து

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம்.,

வையம் நீடுக மாமழை மன்னுக!
மெய் விரும்பிய அன்பர் விளங்குக!
சைவ நன்னெறிதான் தழைத்தோங்குக!
தெய்வ வெண் திருநீறு சிறக்கவே!

வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க! குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க!
மேன்மை கொள் சைவ நீதி விளங்குக! உலகமெல்லாம்!

## காலை பூசைக்குப்பின் பாடவேண்டியது

## முத்திபஞ்சாக்கர மாலை

திருவே! என் செல்வச் சிறப்பே! சிவானந்தத் தெள்அமுத
உருவே! உருவமும் ஊருடன்பேரும் ஒன்றும்புணரா
அருவே! தெளிந்த அறிவே! மெய்யன்பர்க்கு அருளும் தெய்வத்
தருவே! தென்கோமுத்தி **முத்தி பஞ்சாக்கர சற்குருவே!**

சுந்தரமால், அயன்வாழ்வும், ஐந்தாரின் சுவர்க்கவைப்பும்
இந்திரஞாலம், கனாஎனக் கண்டு உன் இணையடிக்கே
அந்தம் இல் காதலுற்று ஆராத இன்பத்து அமர்ந்திருக்கத்
தந்தருள்! கோமுத்தி **முத்தி பஞ்சாக்கர சற்குருவே!**

பண்டு அறியாமை பிடித்து விட்டேனை விடாதுபற்றிக்
கொண்டு, குணவழி விட்டுத் திருத்தி, என்கோது அகற்றிப்
புண்டரிகப் பதம் தந்தாய்க்கு என்னால் ஒரு போகம் உண்டே?
தண்தமிழ்க் கோமுத்தி **முத்தி பஞ்சாக்கர சற்குருவே!**

மாயா படலம் கிழித்து, அருள் ஞானம் விளங்கவைத்து, உன்
நேயஆனந்தத்தில் அமிழ்த்திடுவாய்; நித்த முத்தசுத்தத்
தூயா! சராசரபேதங்கள் யாவையும் தோற்றுவிக்கும்
தாயான கோமுத்தி **முத்தி பஞ்சாக்கர சற்குருவே!**

அரணங்கள் மூன்றும் எரித்தாய்! சரணம். அதிலும், அன்பர்
மரணம் படாது அருள் வைத்தாய்! சரணம். வலிய அந்தக்
கரணங்களால் மெலிந்து எய்த்தேன், சரணம்.நின்பொற்கழலே
சரணம். தென்கோமுத்தி **முத்தி பஞ்சாக்கர சற்குருவே!**

## மாலை பூசைக்குப்பின் பாடவேண்டியது

## மாதவச் சிவஞான யோகிகள் அருளியது

அறிவே அருட்செல்வமே! நிறைவே! அரசே! அடியார்
உறவே என் ஆருயிரே! மணியே! உருகாத நெஞ்சிற்
பிறிவே துரியங் கடந்த சிவானந்தப் பேரமுதச்
செறிவே! கருணைப் பிழம்பே! பஞ்சாக்கரதேசிகனே!

பொய்யும் , கவடும், கொடுமையும், வஞ்சமும் பூண்டபொல்லாக்
கையன், கலதி, முழுமூடனேனும் நின் கண்ணருளால்
உய்யும் படி என்று கூடும்? எந்தாய்! உண்மையாளர் அன்பு
செய்யும் துறைசையுள் தேவே பஞ்சாக்கரதேசிகனே!

பரிசு அறியேன் அருட் பண்பு அறியேன் எனைப் பற்றும் வினைக்
கரிசு அறியேன், அது மாற்றறியேன்,கலரோடு இணங்கித்
துரிசுகளே செயும் பொல்லா உலகத் தொழும்பனுக்கு உன்
தெரிசனம் கிட்டுவது என்றோ ? பஞ்சாக்கர தேசிகனே!

மருவேன் உனதடியார் திருக்கூட்டம் மருவி வஞ்சம்
ஒருவேன், மகளிர் விழிக்கடை நோக்குக்கு உளம்பதைத்து
வெருவேன், அடிமையும் எந்நாள் உனதருள் மேவுவனோ?
திருஆவடுதுறைத் தேவே! பஞ்சாக்கரதேசிகனே!

ஆனந்த வாழ்வில் அடியார் எல்லாரும் அகம்களிப்ப
நான் இந்த மாயத் தொடக்கினில் வீழ்ந்து நலிதல் நன்றோ!
வான் அந்தம் நீண்ட மதில் ஆவடுதுறை வாழ்முதலே!
தேன்உந்து பங்கயத் தாளாய் பஞ்சாக்கரதேசிகனே!

வற்றாக் கருணைத் திருநோக்கும் நின்முக மண்டலமும்,
சற்றே முகிழ்த்த குறுமூரலும் ,தட மார்பழகும்,
பொற்றாளும், சின்முத்திரையும் நெஞ் சூடு பொறித்துவைப்பாய்
செற்றார் புரம்செற்ற தேவே! பஞ்சாக்கரதேசிகனே!

தேறாத நெஞ்சும், தெளியாத சிந்தையும், தேங்கி இன்பம்
ஊறாத கண்ணும், ஒழியாக் கவலையும், உன்புகழே
கூறாத நாவும் எனக்கே தகும் என்று கூட்டினையே!
சீறாது அருள்செய்யும் தேவே! பஞ்சாக்கரதேசிகனே!

நின்னருள் நோக்கினுக்கு எவ்வளவேனும் நெகிழ்ந்துருகாது
என்னுடை வன்மனம் மின்னார் விழிக்கடைக்கு என்னில் அந்தோ !
வன்னியின் நேர்மெழுகாய் உருகாநிற்கும் மாயம் என்னே!
செந்நெறியாய் நின்ற தேவே! பஞ்சாக்கரதேசிகனே!

பிறவித்துயர்இனி ஆற்றேன், அடைக்கலம்; பேயுலகின்
மறுகித் திரிந்து அலைந்து எய்த்தேன், அடைக்கலம் மங்கைநல்லார்
உறவைத் தவிர்த்து உய்யக்கொள்வாய்! அடைக்கலம்; உண்மை அன்பர்
செறிவுக்குள் வாழும் மெய்த் தேவே! பஞ்சாக்கரதேசிகனே!

இருவினை தாம் இவை, மும்மலம் ஈங்கிவை, ஈதுசிவம்,
கருவுறும் ஆருயிர் உண்மை இது என்று காட்டவல்ல
குருபரன் நீயன்றி வேறு அறியேன் இக்குவலயத்தில்
திருவெண்ணெய் மெய்கண்ட தேவே! பஞ்சாக்கர தேசிகனே!

*நமச்சிவாய மூர்த்திகள் திருவடி போற்றி!*
*சிவஞான முனிவரின் சீரடி போற்றி!*

## பஞ்சபுராணம்

### தேவாரம்

சோதியாய்ச் சுடருமானார் சுண்ண வெண் சாந்து பூசி
ஓதிவாயுலகம் ஏத்த உகந்துதாம் அருள்கள் செய்வார்
ஆதியாய் அந்தமானார் யாவரும் இறைஞ்சி ஏத்த
நீதியாய் நியமமாகி நின்றநெய்த் தான னாரே.

### திருவாசகம்

சோதியே! சுடரே! சூழ்ஒளி விளக்கே! சுரிகுழல், பணைமுலை மடந்தை
பாதியே! பரனே! பால்கொள் வெண்ணீற்றாய்! பங்கயத்து அயனும்,
மால் அறியா;
நீதியே! செல்வத் திருப்பெருந்துறையில் நிறை மலர்க் குருந்தம் மேவிய சீர்
ஆதியே! அடியேன் ஆதரித்து அழைத்தால், அதெந்துவே என்று, அருளாயே!

### திருவிசைப்பா

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே அம்பலம் ஆடரங்காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத் தொண்டனேன் விளம்புமா விளம்பே

### திருப்பல்லாண்டு

தாதையைத் தாள்அற வீசிய சண்டிக்கவ் அண்டத் தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற் கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும் நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

### பெரிய புராணம்

கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோமம் ஆகுந் திருச்சிற்றம்பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி

## சமயக்குரவர்கள்



திருஞானசம்பந்தர்



திருநாவுக்கரசர்



சுந்தரர்



மாணிக்கவாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசை கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி



மெய்கண்டதேவர்



அருணந்திசிவம்



மறைஞானசம்பந்தர்



உமாபதிசிவம்

ஈராண்டில் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க்கு அருள்புரிந்த அருள்நந்தி நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞானசம்பந்தர் நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத் திருத்தாள் போற்றி



## விகடசக்கர விநாயகர் துதி

விகட சக்கர ஆரணந் தொடர்
வரும் வித்தக முகில்வீற
விகட சக்கர விந்த மன்னவன்
தனக்கருளும் மெய்த் தலைவாகு
விகட சக்கர வாக மென்முலை
உமை கான்முளை என்னாச்சே
விகட சக்கரர் எந்திரம் எனச்
சுழல் வெம்பவக் கடல் நெஞ்சே.

## குமாரக் கடவுள் துதி



முருகோட்டந் தரப்பாயும் மும்மதமும்
ஊற்றெடுப்ப முரிவிற் கோட்டும்,
ஒருகோட்டு மழகளிற்றை இருகோட்டு
முதுகளிறா உலவக் காட்டிப்,
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு,
குருகோட்டும் பெடைமணந்த
குமரகோட்டத்தடிகள் குலத்தாள் போற்றி.